25th March 1958] [Sri P. S. Chinnadurai]

இதனை நிறைவேற்றினால், என்ன கெட்டுவிடும் என்பதை கனம் அமைச்சர் அவர்கள் ஆலோசிக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். இதனை அவசரம் அவசரமாக நிறைவேற்றாமல் இதனை செலக்ட் கமிட்டியின் பரிசீலனைக்கு விட வேண்டுமென்று ஒரு மனதான முடிவுக்கு கனம் அமைச்சர் அவர்கள் இசைய வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

SRI V. SANKARAN : கனம் சபாநாயகர் அவர்களே, ஏற்கெனவே ஸ்ரீநிவாச அய்யர் அவர்கள் சொன்னது போல் இந்த ஸ்டாம்பு சட்டத் திருத்த மசோதாவில் கண்டிருக்கும் ஷரத்துக்களும், அதற்கு "ஐடெண்டிகல்" ஆக இருக்கும் மூலச் சட்டத்தின் பிரிவுகளும் கம்பாரிடிவ் டேபிள் போல, நேருக்கு நேராக அச்சிட்டுக் கொடுக்கப்படாத காரணத்தால் நான் இரண்டு மணி நேரத்திற்கு மேல் பழைய மூல சட்டத்தையும் பின் திருத்தங்களையும் புரட்டிப் பார்த்தேன். இருந்தாலும் ஓரளவுகூட தெரிந்து கொள்ள முடியவில்லை. இருந்தாலுங்கூட ஒன்றிரண்டு வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். ஒரு சட்டத்திற்குத் திருத்தம் கொண்டு வரும் போது, திருத்தங்களையும் அதற்கு ஐடெண்டிகல் ஆக இருக்கும் பழைய சட்டத்தின் பிரிவுகளும் நேருக்கு நேராக அச்சிட்டுக் கொடுத்தால் நன்றாக இருக்கும். ஏற்கெனவே கனம் அங்கத்தினர் திரு. கோதண்டராமன் அவர்கள் சொன்னதுபோல் கம்பாரிடிவ் டேபிள் இல்லாத நிலைமையில், குறுகிய காலத்தில் புரிந்துகொள்ள முடியாத கஷ்டமான நிலையில் இருக்கும் என்று தெரிவித்துக் கொள்ளுகிறேன். 4-25 p.m.

இரண்டாவதாக, கட்டணங்களை "ரௌண்ட் ஆப்" செய்திருப்பதைப் பார்த்தால், சாதாரணமாக இந்த ஒரு புதிய மசோதா சட்டமானால் முதல் பலி சட்டசபை அங்கத்தினர்கள்தான். அவர்கள் தங்களுடைய பிரயாணப்படி தினப்படி வாங்கும்போது அதற்குரிய நமூனாவில் ஒரு அணா ஸ்டாம்புக்குப் பதிலாக பத்து நயா பைசா ஸ்டாம்பு ஒட்டவேண்டி ஏற்படும். ஆகவே, இந்த திருத்தச் சட்டத்திற்கு முதல் இரை சட்டசபை அங்கத்தினர்கள்தான்.

சாதாரணமாக பஸ்களில் பிரயாணம் செய்யும்போது நயா பைசாவினால் ஏற்படும் தொல்லைகளைப் பார்த்து வருகிறோம். அவர்களுக்கு எது சாதகமாக இருக்கிறதோ அந்த முறையில் நயா பைசா வாங்கிக் கொள்ளப் படுகிறது, அணா நயா பைசா மாற்றத்தின் காரணமாக. அந்த முறையில், இதில் கொடுத்திருக்கும் கம்பாரிடிவ் டேபிளைப் பார்த்தால்கூட, ஐந்து இடத்தில் அதிகப்படியாக இருப்பதை குறிப்பிட முடியும். ஒரு அணா என்பது 6·25 நயா பைசாவுக்குச் சமமாக இருக்கும் போது, பத்து நயா பைசா ஆக்கப்பட்டிருக்கிறது. அதே முறையில் இரண்டணாவுக்கு 12·50 நயா பைசா சமமாக இருக்கும்போது 15 நயா பைசாவாக ஆக்கப்பட்டிருக்கிறது. ஆறு அணாவுக்கு 37·50 நயா பைசா சமமாக இருக்கும் போது 40 பைசாவாக ஆக்கப்பட்டிருக்கிறது. ஒன்பது அணாவுக்கு 56·25 நயா பைசா சமமாக இருக்கும்போது 60 நயா பைசாவாக ஆக்கப்பட்டிருக்கிறது. அதே போல 13 அணாவுக்கு 81·25 நயா பைசாவாக இருக்கும் போது 85 நயா பைசா ஆக்கப்பட்டிருக்கிறது. ஒரு நல்ல gesture ஆக நான் சொல்லும் யோசனைப்படி செய்யலாம். அதாவது 10 நயா பைசா என்பதை 5 நயா பைசாவாகவும், 12·50 என்பதை 10 ஆகவும், 37·50 என்பதை 35 ஆகவும், 56·25 என்பதை 55 ஆகவும், 81·25 என்பதை 80 ஆகவும் மாற்றினால் ஒரு நல்ல gesture ஆக காணப்படும். ஆட்சியாளர்களுக்கும் அவ்வளவு தூரம் இடைஞ்சல் இருக்காது. இதை நான் ஏன் சொல்கிறேன் என்றால், சாதாரணமாக மக்களிடையே ஒரு தப்பு அபிப்பிராயம் ஏற்பட்டிருக்கிறது. அதாவது, அணாவை நயா பைசாவாக மாற்றுகிறதை முகாந்திரமாகக் கொண்டு கட்டணத்தையே அதிகரிப்பது என்பது வழக்கமாகப் போய்விட்டது என்று மக்களிடையே ஏற்பட்டிருக்கும் தப்பபிப்பிராயத்திற்கு இடம் கொடாமல் இருக்க நான் சொன்ன யோசனையைச் சர்க்கார் ஏற்றுக் கொள்ள வேண்டும். பஸ் கட்டணமாக இருந்தாலும் சரி, பத்திரிகைத் தாளாக இருந்தாலும் சரி, நயா பைசாவுக்கு மாற்றம் வரும்போது விலை அதிகரிக்கப்படுவதைப் பார்க்கிறோமேயொழிய, கட்டணம் சற்றுக்கூட குறைவதாகக் காணோம். ஆனால், அரசாங்கத்தைப்

பொறுத்த வரையில் இந்த விஷயத்தில் ஒரு நல்ல **gesture** ஆக, நான் சொன்ன யோசனைப்படி குறைத்துக் கொண்டால் மற்றவர்களுக்கு வழி காட்டியாக இருக்கும் என்றும் தெரிவித்துக் கொள்ளுகின்றேன்.

ரௌண்ட் ஆப் செய்வதற்கு மட்டும்தான் இது உபயோகப்படுத்தப்படு கிறது என்று சொல்லப்படுகிறது. ஆனால், செக்ஷன் 4, செக்ஷன் 5 இவைகளுக்கு திருத்தங்கள் செய்திருப்பதைப் பார்த்தால் ஒரு ரூபாய் என்று இருந்ததற்குப் பதிலாக மூன்று ரூபாய் ஆக்கப்பட்டிருக்கிறது. கௌண்டர்பார்ட், டூப்ளிகேட் சம்பந்தமாகவும் ஒரு ரூபாய்க்குப் பதிலாக மூன்று ரூபாய் ஆக்கப்பட்டிருப்பதன் காரணம் தெரியவில்லை. நயா பைசா வாக மாற்றும்போது கொஞ்சம் கூடியிருக்கலாம் ஆனால், இங்கே காரண மின்றி இப்படி ஒரேயடியாக உயர்த்தியிருப்பதன் காரணம் புரியவில்லை. திருத்தப்பட்ட செக்ஷன் (4)

**"(1) Where in the case of any sale, mortgage or settlement, several instruments are employed for completing the transaction, the principal instrument only shall be chargeable with the duty prescribed in Schedule I for the conveyance, mortgage or settlement and each of the other instruments shall be chargeable with a duty of three rupees instead of the duty, if any, prescribed for it in that Schedule".**

என்று இருக்கிறது. அதாவது புதிதாகப் போடப்பட்டிருப்பதில் முன்பு ஒரு ரூபாய் இருந்தது. மூன்று ரூபாய் என்று மாற்றப்பட்டிருக்கிறது. ஐந் தாவது செக்ஷனில் கௌண்டர்பார்ட், டூப்ளிகேட் சம்பந்தமாகவும் மூன்று ரூபாய் என்று இப்பொழுது போடப்பட்டிருக்கிறது இப்படி உயர்த்தப்பட் டிருப்பதின் காரணம் **statement of objects and reasons** லும் கூட விளக்கப் படவில்லை. நயா பைசா மாற்றம் என்பதைச் சாதனமாகக் கொண்டு ஒரு ரூபாய் என்று இருந்ததை ஏன் மூன்று ரூபாய் ஆக்க வேண்டுமென் பது எனக்குப் புரியவில்லை.

கனம் வி. கே. ராமசாமி முதலியார் அவர்கள் சொன்னது போல் **spoilt and unused** செய்யப்பட்ட ஸ்டாம்ப்கள் உபயோகப்படுத்தப் படாத ஸ்டாம்ப்களைத் திருப்பிக் கொடுத்தால் ஒரு அணு கழித்துக் கொண்டதுபோக, அதாவது 16-ல் ஒரு பங்கு குறைத்துக் கொண்டது போக பாக்கி கொடுக்கப்படும் என்று இருந்தது. இப்பொழுது பத்து நயா பைசா குறைக்கப்படும் என்று சொல்லப்படுகிறது. ஆயிரம் இரண்டாயிரம் என்று திருப்பிக் கொடுக்கும்போது ஜனங்கள் மிகவும் பாதிக்கப்படுவார்கள். ஆகவே, பத்து நயா பைசா என்பதை ஐந்து நயா பைசாவாக்கினுல்கூட ஒரு விதத்தில் நல்ல வழியாக இருக்கும் என்று சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

கனம் அங்கத்தினர் திரு. லாசர் சொன்னதுபோல் வக்கீல் தொழில் செய்ய வேண்டுமானுல் 625 ரூபாய் செலுத்த வேண்டுமென்று விதித்திருப் பது அதிகமானதாகும். வக்கீல் தொழிலில் இருக்கிறவர்கள் கடைசி பட்சமாக **last refuge** என்ற முறையில் வக்கீல் தொழிலுக்கு வருகிறுர் கள். வைத்தியக் கல்லூரி, இன்ஜினீரிங் கல்லூரி, உபாத்தியாயர் கல்லூரி ஆகிய எல்லாக் கல்லூரிகளையும் சுற்றிப் பார்த்துவிட்டு எங்கும் இடம் கிடைக்காவதவர்கள் கடைசியில் வேறு வழியில்லாமல் சட்டக் கல்லூரிக்கு போகக்கூடிய நிலைமை ஏற்படுகிறது. எல்லா இடங்களிலும் அப்ளிகேஷன் போட்டுவிட்டு எந்த இடங்களிலும் கிடைக்காவிட்டால், **last refuge** ஆக சட்டக் கல்லூரி தான் கிடைக்கிறது. அந்த முறையில் வக்கீல் படிப்பு படித்து, வக்கீல் தொழில் பல கஷ்டங்களுக்கிடையே செய்கிறவர்களுக்கு அபராதம் விதிப்பதுபோல, தடை விதிக்கிற மாதிரி இவ்வளவு பெரிய தொகை கட்டணம் விதிக்கப்படுகிறது. ஒருவேளை அந்தக் காலேஜிலும் அதிகமாகச் சேராமலிருக்கும்பொருட்டு இவ்வளவு தொகை விதிக்கப்பட் டிருக்கிறதோ என்று கூட நினைக்கத் தோன்றுகிறது. ஏதோ வேறு வழி யில்லாமல் வக்கீல் தொழிலுக்குப் போகக்கூடிய நிலை ஏற்படும்போது தண்டனை கொடுக்கிற மாதிரி ஏன் இவ்வளவு பெரிய தொகை விதிக்க வேண்டும் என்று நான் கேட்கிறேன். அவர்கள் விஷயத்தில் சர்க்கார்

25th March 1958] [Sri V. Sankaran]

அதிகமாக இரக்கம் கொள்ளவேண்டும். கஷ்டமான நிலைமையில் வக்கீல் தொழில் நடத்துவதால் வர வர அவர்கள் நிலைமை கீழே போய்க் கொண்டிருக்கிறது. அவர்கள் செலுத்த வேண்டிய கட்டணம் ரூபாய் 50-க்கு குறைக்கவேண்டும் என்று நான் கேட்டுக்கொள்ளுகிறேன்.

கனம் அங்கத்தினர் ஸ்ரீநிவாச அய்யர் அவர்கள் சொன்னதுபோல், ஸ்டாம்ப் கட்டணம் சம்பந்தமாக மக்கள் கஷ்டப்படக்கூடாது ; அந்த அளவுக்கு விவரமாக விளக்கப்பட்டு புத்தகம் வெளியிடப்படவேண்டும்.

ஏற்கெனவே இருந்ததுபோல் முதல் ஷெட்யூலும், இரண்டாவது ஷெட்யூலும் ஒன்றுகச் சேர்க்கப்பட்டு ஒரே ஷெட்யூலாக்கப்பட்டது வரவேற்கக்கூடிய தாகும். நான் சொன்ன யோசனைப்படி திருத்தங்கள் கொண்டுவந்தால் நன்றாக இருக்கும் என்று சொல்லிக்கொண்டு என்னுடைய வார்த்தையை முடித்துக்கொள்ளுகின்றேன்.

SRI M. JAGANNATHAN : இந்த ஸ்டாம்பு திருத்த மசோதாவை ஒரு செலக்ட் கமிட்டிக்கு அனுப்பவேண்டுமென்று கோரும் அங்கத்தினர்களில் நானும் ஒருவன். இதற்கு வேறு எந்த காரணமும் இந்தச் சந்தர்ப்பத்தில் சொல்ல வேண்டிய அவசியம் இல்லை. காலையிலிருந்து இதுவரையில் சர்க்கார் தரப்பிலிருந்தே எட்டு, பத்து திருத்தங்கள் ஒன்றன்பின் ஒன்றாக வந்துகொண்டே இருப்பதிலிருந்து தெரிந்துகொள்ளலாம். இதை சர்க்கார் நல்ல முறையில் பரிசீலனை செய்யவில்லை என்று தோன்றுகிறது. ஆகவே இதை நல்ல முறையில் பொறுக்குக் கமிட்டிக்கு அனுப்பி பல பல திருத்தங்களையும் செய்துகொண்டுவரவேண்டும் என்பதில் சந்தேகம் இல்லை. இந்த மசோதாவின் நோக்கத்தில் "It is, however, considered desirable from a practical point of view to have the new rates in multiples of five naye paise" என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதன் நோக்கம் வரவேற்கத்தகுந்ததாக இருந்தபோதிலும் இதன் முடிவு என்ன என்பதைப்பற்றிச் சிந்தித்துப் பார்க்கவேண்டும். இந்த மாதிரி பழைய நாணயத்திலிருந்து புது நாணய விகிதாசாரத்தை மாற்றி அமைப்பதன் காரணமாக சர்க்கார் கிட்டத்தட்ட 25 லட்ச ரூபாய் மறைமுகமாக வருமானத்தைத் தேடிக் கொள்ள விரும்புவதாகத் தெரிகிறது. இது ஒரு பினன்ஷியல் பில் ஆகவும் இருப்பதால் அவசியம் ஒரு பொறுக்குக் கமிட்டியை நியமித்துப் பரிசீலனை செய்ய வேண்டும் என்பதை வற்புறுத்தி நான் முடித்துக்கொள்கிறேன். 4-30 p.m.

MR. SPEAKER : Hon. Members Sri Srinivasa Iyer and Sri V. Sankaran raised an objection that the annexure was not supplied together with the Bill. Well, the notice given in respect of this Bill was very short and the Hon. Minister requested me to waive notice. As it was stated that the Assembly will have to discuss the Bill today, the 25th March, the department felt that it would not be possible to prepare the annexure and explain the full scope of the Bill before the 25th March. Therefore, I thought that it was not necessary in view of the urgency of the matter and also the fact that the time at our disposal was very short. I agreed to it not because knowledge of the annexure was not necessary, but because of want of time.

*THE HON. SRI M. A. MANICKAVELU : கனம் சபாநாயகர் அவர்களே, முதலில் அதாவது இந்த மசோதாவின்கீழ் பெரிய மாறுதல்கள் செய்து ரேட்டு வித்தியாசம் செய்வதாக இருந்தால் அது நிதானமாக பார்க்கவேண்டும். சாதாரணமாக ரூபாய் அணு பைசாவாக இருப்பதை நையா பைசா நாணயமாக மாற்றுவதுதான் இதன் கருத்து. இதனுல் இருபத்தைந்து லட்சம், முப்பது லட்சம் வருமானம் சர்க்காருக்கு வரும் என்பது எல்லாம் தப்பு. அப்படி ஒன்றும் பணம் ஜாஸ்தியாக வராது. இதில் நாங்கள் ஒன்றும் சுயேச்சையாகச் செய்யவில்லை. இந்திய சர்க்கார் ஒரு அணுவுக்கு இவ்வளவு நையா பைசா, ஐந்தணுவுக்கு இவ்வளவு நையா பைசா என்பதாக டேபிள்

கொடுத்திருக்கிறார்கள். அவர்கள் சொல்வதை எல்லா மாகாண சர்க்காரும் ஒருமுகமாக ஏற்றுக்கொள்ளவேண்டும், அதன் காரணமாக அவர்கள் எப்படி சொன்னார்களோ அப்படியே இப்போது மாற்றி அமைக்கப்படுகிறது. ஆகவே பொறுக்குக் கமிட்டியில் இதை நம் இஷ்டப்படி யோசித்து மாற்றிக்கொள்ளலாம் என்பதற்கும் இடம் இல்லை.

அடுத்தபடியாக பழைய நாணயத்தை புது நாணயமாக மாற்றுவதில் கொஞ்சம் அதிகமாகிறது. ஆனால் அதைக் குறைக்கவோ மாற்றவோ வசதி இல்லை என்று சொன்னேன். அதோடு இந்த மசோதாவில் வக்கீல்களைப் பற்றியும், அவர்களுக்கு என்ரோல் சார்ஜ் குறைக்கவேண்டும் என்பது பற்றியும் பேசினார்கள். இந்த மசோதாவின்கீழ் அவைகளை எல்லாம் பற்றிப் பேசுவதற்கே இடம் இல்லை. நானும் ஒரு வக்கீல்தான். எல்லா வக்கீல்களுமே இந்த மசோதாவில் பங்கெடுத்துக்கொண்டிருக்கிறார்கள். என்ரோல் சார்ஜை குறைப்பது பற்றி இதில் எவ்வாறு யோசிப்பது ? ஏதோ பேசுவதற்கு ஒரு சந்தர்ப்பம் கிடைத்தது என்று வேண்டுமானால் தான் சொல்லியிருக்கலாம் என்று நினைக்கிறேன். அதைத்தவிர பிரயோசனமான காரியம் ஒன்றும் இல்லை. மற்றப்படி ஷரத்து வாரியாகப் பரிசீலனை செய்யும்போது இதர திருத்தங்களுக்கு எல்லாம் பதில் அளிக்கிறேன். இந்த மசோதாவைப் பொறுக்குக் கமிட்டிக்கு அனுப்பவேண்டும் என்பது ஒத்துக்கொள்வதற்கில்லை. இன்னொன்று சொல்லப்பட்டது. மூன்று ரூபாய் இருந்ததே அதை மாற்றுவதில் 5 ரூபாய் ஆகிவிடும் என்று சொன்னார்கள். ஆரம்பத்திலேயே சொன்னேன். கனம் அங்கத்தினர்கள் ஸ்டாம்பு ட்யூட்டி பற்றி 1922-ம் வருஷ ஷெட்யூலைப் பார்த்து சொல்லுகிறார்கள். அதற்கப்புறம் அதில் திருத்தம் செய்யப்பட்டிருக்கிறது. கடைசியாகச் செய்யப்பட்டிருக்கிற திருத்தத்தையொட்டித்தான் இப்போது புது நாணய விகிதத்தில் அமைக்கப்படுகிறதே தவிர வேறு ஒன்றும் உயரவில்லை. அதோடு கொஞ்சம் பணம் சர்க்காருக்கு வந்தாலும் பாதகமில்லை. அதை இந்திய சர்க்காருக்கு அனுப்பிவிடப்போவது இல்லை. நம் ராஜ்ய மக்களுக்கேதான் செலவிடப்படும். ஆகவே இதை பொறுக்குக் கமிட்டிக்கு அனுப்பாமல் உடனடியாக விவாதத்திற்கு எடுத்துக்கொள்ளவேண்டும்.

Mr. SPEAKER : I shall now put the amendment moved by hon. Member Sri S. M. Annamalai to the vote of the House. The question is—

" That the Indian Stamp (Madras Amendment) Bill, 1958 (L.A. Bill No. 12 of 1958) be referred to a Select Committee."

The amendment was put and lost.

Mr. SPEAKER : I shall now put the original motion moved by the Hon. Minister to the vote of the House. The question is—

" That the Indian Stamp (Madras Amendment) Bill, 1958 (L.A. Bill No. 12 of 1958) be taken into consideration."

The motion was put and carried and the Bill was taken into consideration.

Clauses 2 to 12 were put and carried.

*Clause* 13.

Mr. SPEAKER : The motion is—

" That clause 13 do stand part of the Bill."

25th March 1958]

Sri V. K. RAMASWAMY MUDALIYAR : Sir, I move—

" *For* the words ' ten naye paise ' *substitute* the words ' five naye paise.' "

Sri K. RAMACHANDRAN : I second the amendment, Sir.

The Hon. Sri M. A. MANICKAVELU : For the reasons that I have already stated, I am unable to accept the amendment, Sir.

Mr. SPEAKER : The question is :—

" *For* the words ' ten naye paise ' *substitute* the words ' five naye paise.' "

The amendment was put and lost.

Clause 13 was put and carried.

*Clause* 14.

Mr. SPEAKER : The motion is—

" That clause 14 do stand part of the Bill."

Sri V. K. RAMASWAMY MUDALIYAR : Sir, I move—

" The existing section 78 of the principal Act to be *renumbered* as sub-section (1) and the proposed new section to be *numbered* as sub-section (2) of section 78."

Sri K. RAMACHANDRAN : I second the amendment, Sir.

Sri V. K. KOTHANDARAMAN : Sir, I move—

" Before the proposed new section 78 *insert* the following, namely :—

' 78. *Act to be translated and sold cheaply.*—Every State Government shall make provision for the sale of translations of this Act in the principal regional language or languages of the territories administered by it at a price not exceeding twenty-five naye paise per copy, ' and renumber the new section 78 suitably.' "

The amendment was duly seconded.

Mr. SPEAKER : கோதண்டராமன் அவர்கள் இப்பொழுது வேண்டுமானால் பேசலாம்.

Sri V. K. KOTHANDARAMAN : சபாநாயகர் அவர்களே, சென்ட்ரல் ஆக்டில் இந்தச் சட்டப் புத்தகம் நான்கணாவிற்கு மேற்படாமல் விற்க வேண்டுமென்று இருக்கிறது. விலைபற்றி இங்கு குறிப்பிடவில்லை. ஆகவே, அது அதிகப்படியான விலைக்கு விற்கப்படுமா இல்லையா என்பது தெரியவேண்டும். மேலும், இந்தச் சட்டப் புத்தகத்தை தமிழில் ப்ரின்ட் செய்து குறைந்த விலைக்குக் கொடுத்தால் அதை வாங்கி எல்லோரும் படித்துத் தெரிந்துகொள்ள வாய்ப்பு இருக்கும் என்ற காரணத்தினால் தான் இந்தத் திருத்தத்தைக் கொடுத்திருக்கிறேன்.

The Hon. Sri M. A. MANICKAVELU : இந்தத் திருத்தத்திற்கு அவசியமில்லை. ஏனென்றால் இப்பொழுது நம் மாகாணத்தில் தமிழ் மொழி ஆட்சி மொழியாகிவிட்டது. ஆகவே, எல்லாச் சட்டங்களும் தமிழில் பிரசுரிக்கப்படும். ஆகவே, இந்தத் திருத்தத்திற்கு அவசியமில்லை.

[25th March 1958

MR. SPEAKER : I shall now put the amendment moved by Sri V. K. Ramaswamy Mudaliyar to the vote of the House. The question is—

"The existing section 78 of the principal Act to be *renumbered* as sub-section (1) and the proposed new section to be *numbered* as sub-section (2) of section 78."

The amendment was put and lost.

MR. SPEAKER : Now that Sri Ramaswami Mudaliyar's amendment is lost, I declare the amendment moved by Sri V. K. Kothandaraman which is also to the same effect, as lost.

Clause 14 was put and carried.

*Clause* 15.

MR. SPEAKER : The motion is—

"That clause 15 do stand part of the Bill."

SRI S. LAZAR : Sir, I move—

"In entry 2 (a) of item (i) against 'proper stamp-duty', *insert* the words 'three-fourth of' before the words 'the same duty as a bond (No. 15), etc."

Sir, it has been categorically stated by the Hon. Minister that the intention of the Government is not to increase the duty which is already payable. It is stated in entry (2), "Administration Bond including a bond given under section 291 or section 375 of the Indian Succession Act, 1925 (Central Act XXXIX of 1925) or section 6 of the Government Savings Banks Act, 1873 (Central Act V of 1873.)" I want that the words 'three-fourth of' may be inserted before the words 'the same duty as a bond (No. 15), etc. According to the rates proposed by Government, the same duty as a bond is fixed in respect of cases where the amount does not exceed Rs. 1,000. I want that it should be three-fourth of the same duty as a bond. That is all.

The amendment was duly seconded.

SRI S. LAZAR : Sir, I move—

"In entry 6 (2) (a) (ii) of item (1) for the entry—

'and for every additional Rs. 10,000
or part thereof in excess of Rs. 30,000. 27 00 12 25 9 00"

the following entry may be substituted, namely—

'and for every additional Rs. 10,000
or part thereof in excess of Rs. 30,000. 27 00 13 50 9 00"

The amendment was duly seconded.

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I move—

"In item (i), in entry 11, *for* the words 'in any High Court' *substitute* the words 'in the Madras High Court.'"

25th March 1958] [Sri M. A. Manickavelu]

"In item (iv), in entry 30, and in items (*a*) and (*b*) of the Exemptions thereunder, *for* the words 'of any High Court" *substitute* the words 'of the Madras High Court.'"

There are also a series of other amendments which are of a consequential nature and I move them also—

"In item (viii) *for* the opening paragraph *substitute* the following, namely :—

'(viii) for entries 54 to 61, the following entries shall be substituted, namely :—'"

"In entry 62 of item (viii), in the opening paragraph *for* the words and letters '62. TRANSFER (whether with or without consideration)—', *substitute* the following, namely :—

'(ix) in entry 62, for clauses (*b*), (*c*), (*d*) and (*e*), the following clauses shall be substituted, namely :—'"

"In entry 62 of item (viii) *reletter* clauses (*a*), (*b*), (*c*) and (*d*) in the coloumn 'Description of instrument' as clauses (*b*), (*c*), (*d*) and (*e*) respectively."

"In entry 62 of item (viii) *for* the words 'chargeable' under clauses (*a*) and (*b*) of this article' in the column 'Proper stamp-duty' *substitute* the words 'chargeable under clauses (*b*) and (*c*) of this article.'"

'In entry 62 of item (viii) *omit* the *Exemptions* in the column 'Description of Instrument'"

"In item (viii) immediately before entry 63, *insert* the following, namely :—

'(x) *for* entries 63, 64 and 65, the following entries shall be *substituted*, namely :—'"

SRI S. LAZAR : With regard to the amendment that I have given notice of in respect of entry 30 (*a*)—enrolment of Advocates —the Hon. Minister has stated that it may not be quite relevant under the circumstances in which the present Bill has been brought forward. I am of the opinion that any section of the Stamp Act can be amended even now provided it is not in conflict with the Act already promulgated by the Central Government. But, as the Hon. Minister has stated that this matter could be considered at a later time and that he would consider it later, I do not propose to move the amendment, Sir.

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, in the first place, I must thank the hon. Member Sri Lazar who was kind enough not to move his amendment relating to enrolment of Advocates.

As for my amendments, the first one is intended to clarify the position. Instead of saying 'any High Court', it is specifically stated 'in the Madras High Court'. That is all and there is no difference of opinion with regard to that. As for the other amendments, though they may appear to be very big on paper, they are only of a consequential nature. They are very innocuous amendments.

[Sri M. A. Manickavelu] [25th March 1958

Therefore, since we have mentioned that in the amending Bill, we have to rectify it. It does not affect the basic object of the Bill. With regard to the other amendments moved by the hon. Member, I am glad to say that I accept the amendments Nos. 11 and 12.

MR. SPEAKER: The question is—

"In entry 2 (*a*) of item (i) against 'proper stamp duty' *insert* the words 'three-fourth of' before the words 'The same duty as a bond (No. 15), etc.'"

The amendment was put and carried.

SRI R. SRINIVASA IYER: Mr. Speaker, with reference to amendment No. 12 moved by Mr. Lazar and accepted by the Government, I would make one submission. Formerly the rate was Rs. 6–2–0 and by Act XVI of 1943, it was made Rs. 12–4–0. Why should we make it Rs. 13·50 now, when the Government want to make it only Rs. 12·25? I desire to point out to the hon. Mover that in respect of item 6—Agreement relating to deposit or title-deeds, pawn or pledge, the Act of 1922 fixed the stamp fee at Rs. 6–2–0, and that the Amendment Act of 1943 made it Rs. 12–4–0. Now the Government simply make it Rs. 12·25. The hon. Member's amendment will increase it to Rs. 13·50 which the Government do not want.

MR. SPEAKER: Let me make my position clear. I find that all rates in column 2 are just half of the rates mentioned in column 1. Therefore, I thought that Mr. Lazar intended that Rs. 13 50 being half of Rs. 27 should be there. That was the impression he gave me. But the hon. Member, Mr. Srinivasa Iyer, says it is not necessary and is raising an objection to it. I have nothing to do with the Bill except to put the various amendments to vote.

SRI S. LAZAR: Sir, the Amendment Act is old. (Laughter.) The Member is not quite correct. The latest position is this. I have got the rate here in the Hoe & Co.'s Diary and that is the latest.

SRI R. SRINIVASA IYER: On a point of order, Sir. When we have got a Government publication, is it open to a Member to look into the Hoe & Co.'s Diary and say we are wrong? We have got the Madras Code here. At page 1692, we find the relevant entry. Why should we enhance it now?

THE HON. SRI M. A. MANICKAVELU: The trouble arose in this way. What the hon. Member said was due to a printer's devil in the Code.

MR. SPEAKER: What is the correct figure?

THE HON. SRI M. A. MANICKAVELU: It is Rs. 6–4–0.

25th March 1958]

MR. SPEAKER : I am convinced that Mr. Srinivasa Iyer is right and Mr. Lazar is wrong. I have to rule the amendment out of order.

SRI S. LAZAR : I think what the Hon. Minister said is something totally different.

MR. SPEAKER : Will the hon. Member talk it over for a minute with the Hon. Minister? I shall wait.

THE HON. SRI M. A. MANICKAVELU : I suggest, Sir, that you cut the Gordian knot.

MR. SPEAKER : I rule Mr. Lazar's amendment out of order.

Mr. Lazar did not move his amendment. Now, I shall put the Government amendments to vote. The question is—

"In item (i), in entry 11, *for* the words 'in any High Court', *substitute* the words 'in the Madras High Court'."

The amendment was put and carried.

MR. SPEAKER : The question is—

"In item (iv), in entry 30 and in items (*a*) and (*b*) of the Exemptions thereunder, *for* the words 'of any High Court', *substitute* the words 'of the Madras High Court'."

The amendment was put and carried.

MR. SPEAKER : The question is—

"In item (viii) *for* the opening paragraph, *substitute* the following, namely :—

'(viii) for entries 54 to 61, the following entries shall be substituted, namely :—'"

The amendment was put and carried.

MR. SPEAKER : The question is—

"In entry 62 of item (viii), in the opening paragraph *for* the words and letters '62. TRANSFER (whether with or without consideration)—', *substitute* the following, namely :—

'(ix) in entry 62, for clauses (*b*), (*c*), (*d*) and (*e*), the following clauses shall be substituted, namely :—'"

The amendment was put and carried.

MR. SPEAKER : The question is—

"In entry 62 of item (viii) *reletter* clauses (*a*), (*b*), (*c*) and (*d*) in the column 'Description of instrument' as clauses (*b*), (*c*), (*d*) and (*e*) respectively."

The amendment was put and carried.

MR. SPEAKER : The question is—

"In entry 62 of item (viii) *for* the words 'chargeable under clauses (a) and (b) of this article' in the column 'Proper stamp-duty' *substitute* the words 'chargeable under clauses (b) and (c) of this article'."

The amendment was put and carried.

MR. SPEAKER : The question is—

"In entry 62 of item (viii) *omit* the EXEMPTIONS in the column 'Description of Instrument'."

The amendment was put and carried.

MR. SPEAKER : The question is—

"In item (viii) immediately before entry 63, *insert* the following, namely :—

'(x) for entries 63, 64 and 65, the following entries shall be substituted, namely :—'"

The amendment was put and carried.

Clause 15, as amended, was put and carried.

Clauses 16 to 19 were put and carried.

Clause 1 and the Preamble were put and carried.

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I move—

"That the Indian Stamp (Madras Amendment) Bill, 1958 (L.A. Bill No. 12 of 1958), as amended, be passed."

4-50 p.m.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : கனம் சபாநாயகர் அவர்களே, இந்த மசோதாவானது இப்போது சட்டமாக்கப்படவிருக்கிறது. இதில் அனேக குளறுபடிகள் இருப்பதை நாம் பார்த்தோம். இதைப்பற்றி இரண்டு பக்கத்தில் இருப்பவர்களும் பேசினுர்கள். இதை செண்ட்ரல் ஆக்டில் கொண்டு வந்த பிறகு இங்கு கொண்டு வந்திருக்கலாம். மேலும் இதில் அனெக்ஸர் கொடுத்திருந்தால் விவரங்கள் எல்லாம் வெட்டவெளிச்சமாக தெரிந்திருக்கும். இப்போது இருப்பதைப் பார்த்தால் இதில் அதிகமாக மாறுதல்கள் ஒன்றுமில்லை என்று நினைக்கக்கூடும். இனிமேலாவது டிப்பார்மெண்டார்களுக்கு சரியானபடி உத்தரவு போட்டு இனிமேல் வரக்கூடிய மசோதாக்களிலாவது சரியானபடி அனெக்ஸர் கொடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அடுத்ததாக ஸ்டாம்பு வாங்குவதில் பழைய ஸ்டாம்புகளை திரும்ப கொடுக்கும்போது அது கெட்டுப்போய்விட்டால் ஒன்றரை அணு, ஒன்றேமுக்கால் அணு என்று கொடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அதிலும் இப்போது ரெஜிஸ்ட்ரேஷனுக்கு சார்ஜ்கள் எல்லாம் அதிகமாகிவிட்டது. இதனுல் பொது மக்கள் ரொம்பவும் கஷ்டப்படுகிறுர்கள். இதைப்பற்றி அதிகமாக சர்ச்சை செய்யவேண்டும். இதைத்தான் நான் சொன்னேன். ஆகவே இதைப் பற்றி பொதுமக்கள் புரிந்துகொள்ளும்படியான வாய்ப்பை ஏற்படுத்தி கொடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

* SRI K. ANBAZHAGAN : அவைத்தலைவர் அவர்களே, இந்தியன் ஸ்டாம்ப்ஸ் அமெண்ட்மெண்ட் ஆக்ட் என்று ஆங்கிலத்தில் இருப்பதை தமிழில் இந்தியத் தபால் தலை மசோதா என்று மொழிபெயர்த்திருப்பது கருத்தினில் சரியல்ல என்று நினைக்கிறேன். அதற்கு பதிலாக இந்திய முத்திரை மசோதா, அரசாங்கத்தலை மசோதா என்று வேண்டுமானுல்

25th March 1958] [Sri K. Anbazhagan]

வைத்துக்கொள்ளலாம். இந்த மசோதா ஆய்வுக்குழுவுக்கு விடப்பட்டிருந்தால் இதைப்பற்றி கூடுதலாக பரிசீலனை செய்திருக்க முடியும். புதிய நாணய திட்டமானது கொண்டு வரப்பட்ட காரணத்தால் ரூபா அணுவிலிருப்பதை புதுக்காசு முறைக்கு மாற்றும்போது இம்மாதிரி குழப்பம் ஏற்படுவது இயற்கை. பொதுமக்களிடத்தில் வழங்குகிற காசுமுறையில் மசோதா கொண்டுவரவேண்டியது மிகவும் அவசியமே. ஆனால் புதுக்காசுகளின் அளவு முறைக்கேற்ப—ஒரு புதிய விகிதாசாரத்தில்—ஒரு புதிய சட்டமே கொண்டுவர வேண்டுமே தவிர—பழைய தொகையான இத்தனை அணுவிற்கு இத்தனை காசு என்று அட்டவணை தயாரிப்பது முறையாகாது. இதை ஆங்கிலத்தில் "ரேஷனல் பேஸிஸ்" (Rational Basis) என்று குறிப்பிடலாம். அந்த அடிப்படையை அமைத்துக்கொண்டு புதுக்காசு எப்பொழுது புழக்கத்திற்கு வருகிறதோ அந்தக் காலத்தில் முத்திரை விலைகளையும் ஐந்து காசு, பத்து காசு, பதினைந்து காசு என்று புதிய காசு முறையில் கொண்டு வரவேண்டும். இதற்காக மாற்றப்படும்பொழுது அதிகமான பணம் வசூலிப்பது நல்லது அல்ல என்பது இங்கு தெரிவிக்கப்பட்டது. ஆனால் அமைச்சர் அவர்கள் அளித்த பதிலில் "இந்திய அரசாங்கம் ஒரு அட்டவணை ஷெட்யூல் அமைத்திருக்கிறது. அதை வைத்துக்கொண்டுதான் மாகாண அரசாங்கம் இங்கு சட்டம் நிறைவேற்ற வேண்டியிருக்கிறது" என்று குறிப்பிட்டார்கள். மாநில அரசாங்கத்தின் அல்லது இந்த சட்டமன்றத்தில் எடுத்துச்சொல்லப்படுகிற கருத்துக்களை ஒரு வேளை மத்திய சர்க்காரால் மதிக்க மறுக்கின்ற சூழ்நிலையை இது காட்டுவதாக இருக்கிறது. நம்முடைய கருத்துக்களுக்கேற்ப நாமே சட்டம் அமைத்துக்கொள்வதற்கு நம்முடைய சட்டமன்றத்திற்கு வாய்ப்பு இருக்கவேண்டுமே தவிர டெல்லியிலிருந்து ஒரு திட்டத்தை மத்திய அரசாங்கம் அனுப்பினால் அதை மாநில அரசாங்கம் ஏற்றுக்கொள்ளவேண்டும் என்றுள்ள நிலை மாறவேண்டும். ஆகவே இதை ஆய்வுக்குழுவுக்கு அனுப்பியிருந்தால் வழக்கறிஞர்களாக இருக்கின்ற அங்கத்தினர்கள் இதில் காணப்படும் குழப்பமான பிரச்னைகளுக்கு முடிவு கண்டிருக்கக்கூடும். அந்த சந்தர்ப்பத்தை ஆட்சியாளர்கள் அளிக்கவில்லை. எனினும் இதிலுள்ள குறைகளை களைந்தெறிவதற்கு ஆட்சியாளர்கள் தாமே முன்வருவார்கள் என்று நம்புகிறேன். மேலும் இந்த மசோதாவானது சட்டமாக வருகின்ற இந்த நேரத்தில் இன்னும் நாள்தோறும் திருத்தப்படவேண்டிய நிலைமை வந்து கொண்டிருக்கும் என்றுதான் நினைக்கிறேன். ஆகவே இப்படிப்பட்ட சட்டங்களை பொதுமக்களின் நன்மையின் அடிப்படையில் கருதிக்கொண்டு வரவேண்டுமென்று கேட்டுக்கொண்டு இந்த அளவில் இதை நான் ஆதரிக்கிறேன்.

SRI R. SRINIVASA IYER : கனம் சபாநாயகர் அவர்களே, இந்த மசோதா சட்டமாக நிறைவேற்றப்போகிற இந்த தருணத்தில் நான் ஏற்கெனவே சொன்ன விஷயத்தைப்பற்றி இன்னும் சொல்லுவதாக இருந்தால் இன்னும் விபரமாக சொல்லிக்கொண்டேயிருக்கலாம். அதாவது இந்த சட்டத்தினால் பொதுமக்களுக்கு ஏற்படுகிற கஷ்டத்தைப்பற்றி இங்கு பேசப்பட்டது. 1922-ல் கொண்டுவரப்பட்ட இந்த Indian Stamp Act பல தடவை திருத்தப்பட்டிருந்த போதிலும், Section, Section-ஆக திருத்தப்பட்டிருக்கிறதே தவிர பூராவும் சேர்த்து ஒரே ஷெட்யூலாக இன்னும் பிரசுரம் செய்யப்படவில்லை. Madras Stamps Manual இப்போது பொதுமக்களுக்கு கிடைப்பதே கஷ்டமாக இருக்கிறது. இந்த ஒரு புத்தகத்திற்கு இருக்கும் திருத்தத்தை ஐந்து புஸ்தகங்களாக வெளியிட வேண்டியிருக்கிறது. அதை ஒரு தலைவிரி கோலமான புஸ்தகம் என்று சொல்லலாம். பொது ஜனங்களுக்கு இதை எப்படி பார்ப்பது என்றே தெரியவில்லை. சப்-ரெஜிஸ்ட்ரார் ஆபீஸுக்குப் போனால் இதைப்பற்றி விதம் விதமாக அர்த்தம் சொல்லுகிறார்கள். அங்கு இருக்கின்ற எழுத்துக்காரர்களுடைய கையில் தான் அதிகாரங்கள் எல்லாம் இருக்கிறது. ஆகவே நான் சர்க்காரை கேட்டுக்கொள்வது என்னவென்றால் இவ்விதம் ஐட்டம் ஐட்டமாக இருப்பதை மாற்றி ஒரே ஆக்டாக உடனடியாக அச்சடித்து கொடுக்கும்படி கேட்டுக்கொள்கிறேன். சாதாரணமாக கவர்ண்மெண்ட் பிரஸில் ஒரே இரவில் சில சட்டங்களை, திருத்தங்களை அச்சடித்து கொடுத்துவிடுகிறார்கள். அதுவும் சரியான சமயத்தில் எல்லோருக்கும் கிடைப்பதில்லை.

சர்க்காருடைய வருவாயை உத்தேசித்து இந்த திருத்தங்களை எல்லாம் சேர்த்து அச்சடித்து பொதுஜனங்களுக்கு ஆங்கிலத்திலும் தமிழிலும் கிடைக்கும் படியாக செய்ய வேண்டும். இதற்கு சரியானபடி அப்பெண்டிக்ஸ் கொடுக்கப்படவில்லை என்று சொல்லப்பட்டது. இதைப்பற்றி இதற்கு முன்னுள்ள 1922-ம் ஆண்டு சட்டத்தையும் 1943-ம் ஆண்டு சட்டத்தையும் வைத்துக் கொண்டு மூன்று மணி நேரம் ஆலோசித்துப் பார்த்தாலும் முக்கால்வாசி கூட சரியாக புரியவில்லை. எப்படியும் சட்டம் வந்தாய் விட்டது. நான் வக்கீல்களைப்பற்றி குறிப்பிட்டதை நண்பர்கள் சொன்னார்கள். இனிமேல் வக்கீல்களுக்கு வேலை கிடையாது. **In every Act we pass, we oust the jurisdiction of Civil Courts.** நல்ல வக்கீல்களுக்கு கூட வேலை கிடைப்பது கஷ்டமாக இருக்கிறது. வேலை கிடைப்பது வரவர கஷ்டமாக இருக்கிறது என்று நண்பர் லாசர் அவர்கள் சொன்னது உண்மையாகத்தான் இருக்கிறது. 500 ரூபாய் என்று இருந்ததை இப்போது 625 என்று எதற்காக திருத்தம் கொண்டு வந்து மாற்றியிருக்கிறார்கள் என்று தெரியவில்லை. இனிமேல் நாங்கள் எல்லாம் புதிதாக படிக்கப்போவதில்லை. இனிமேல் வருகின்ற வக்கீல் வர்க்கத்தினருக்கு வேண்டிதான் இது சொல்லப்பட்டது. ஆகவே 625 ரூபாய் என்றிருப்பதை 500 ரூபாய் என்று கொண்டுவந்திருக்கலாம் என்பதையும் தெரிவித்துக்கொள்கிறேன்.

**The Hon. Sri M. A. MANICKAVELU:** கனம் சபாநாயகர் அவர்களே, நம்முடைய மாகாணத்தில் மசோதாவை நிறைவேற்றும் விஷயத்தில் மத்திய அரசாங்கம் தலையிடுவதாக சொல்லப்பட்டது. அவ்விதம் ஒன்றுமில்லை என்பதை சொல்ல விரும்புகிறேன். நாம் மசோதா கொண்டு வருவதில் மத்திய அரசாங்கம் தலையிட முடியாது. ஆனால் சில மசோதாக்களுக்கு அவர்களுடைய அனுமதி வேண்டியிருக்கிறது. அதிலும் இன்னின்ன பகுதிகள் சட்டத்திற்கு விரோதமாயிருக்கிறது என்று சொல்லலாமே தவிர தலையிடமுடியாது. சில சட்டங்களில் தாய் சட்டம் மத்திய அரசாங்கத்தினுடையதாக இருக்கும். இப்போதுள்ள இந்தியன் ஸ்டாம்பு ஆக்டை நமது ராஜ்யத்தில் கொண்டுவரும்பொழுது நமது ராஜ்யத்திலுள்ள நிலைமைகளை ஒட்டி அதற்கு தகுந்தாற்போல் மாற்றம் செய்து நாம் கொண்டு வருகிறோம். இந்த வகையில் தான் சீர்திருத்தம் செய்கிறோம். இப்போது ஏற்பட்டிருக்கிற நயாபைஸா மாற்றத்தினால் தான் இதை அவசரமாக கொண்டுவர வேண்டியிருக்கிறது. அதனால் தான் இதை பொறுக்கு கமிட்டிக்கு அனுப்புவதற்கு ஒத்துக்கொள்ள முடியாமல் இருக்கிறது. இதை வேண்டுமென்றால் எல்லோரும் ஒன்றாக உட்கார்ந்து விவாதித்து இருக்கலாம்.

5-10 p.m. ஆனால் இது பிரமாதமாக இருந்தாலும் இதில் ஓர் சாரமும் இல்லை. சாரம் அதிகமாக இல்லை என்றுதான் சொல்ல வேண்டும். கனம் லாஸர் அவர்கள் ரூ. 625 என்று இருப்பதைக் குறைக்க வேண்டும் என்று சொன்னார். அதற்கு வேறு வழி தேட வேண்டும். ரூபாய், அணா, பைசாவை நயா பைசாவாக மாற்ற வேண்டும் என்றால் அதில் எவ்வளவோ கஷ்டங்கள் இருக்கின்றன என்பது தெரிய வருகிறது. அதனால் அதை எடுத்து விட வேண்டும் என்று சொல்வதற்கு இல்லை. எல்லா மாகாணங்களிலும் ஒரே ரீதியில் இருக்க வேண்டும் என்பதற்காகத்தான் இப்படிச் செய்யப்படுகிறது. மத்திய அரசாங்கத்தில் ஒரு ஜாப்தா கொடுத்திருக்கிறார்கள். அதன்படி எல்லா மாகாணங்களிலும் ஒரேமுகமாக இருக்க வேண்டும் என்பதற்காகத்தான் இப்படிப்பட்ட சட்டம் கொண்டு வரப்பட்டிருக்கிறது. அதனால் மத்திய அரசாங்கம் ஏதோ அதிகாரத்துடன் சொல்லுகிறார்கள், அதை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்பது இல்லை. அவர்கள் ஒன்றும் கட்டாயப்படுத்தவில்லை. எல்லோருக்கும் சௌகர்யமாக இருக்க வேண்டும் என்பதற்காகத்தான் இது கொண்டு வரப்பட்டிருக்கிறது. ஸ்டாம்பு ட்யூட்டி எல்லா மாகாணங்களிலும் ஒரே ரீதியில் இருக்க வேண்டும் என்பதற்காகத்தான் இது ஒத்துக்கொள்ளப்பட்டிருக்கிறது.

திருத்தங்கள் அநேகமாக இருக்கிறது, புத்தகத்தில் ஒட்டி ஒட்டி பெரிதாகப் போய் விட்டது என்று சொல்லப்பட்டது. இப்பொழுதுள்ள ஸ்டாண்டிங்

ஆர்டரும் அப்படித்தான் ஒட்டி ஒட்டி பெரியதாக ஆகி இருக்கிறது. ஒட்டிக்கொண்டே போவதால் அது நீண்டுகொண்டே தான் போகிறது. ஐந்தாறு வருஷங்களை எடுத்துக்கொண்டால் நிறைய ஒட்ட வேண்டியதாகத் தான் இருக்கிறது. அதையெல்லாம் ஒன்றாகச் சேர்க்க வேண்டும் என்றால் அது ஒரே நாளில் முடியாது. இப்பொழுது அச்சடிக்காமல் ஒத்திப் போட்டது நல்லது தான். ஆங்கிலத்தில் அச்சடித்திருந்தால் மறுபடியும் அதையே தமிழில் அச்சடிக்க வேண்டியதாக ஏற்பட்டிருக்கும். இனிமேல் அச்சடிக்கப் போவதால் எல்லாவற்றையும் தமிழிலேயே அச்சடித்து விடலாம். அப்படி அச்சடிக்க சௌகர்யமாக இருக்கும்.

குழப்பம் ஏற்பட்டிருக்கிறது என்று சொன்னார்கள். வக்கீல்களிடத்தில் குழப்பம் இருக்கிறது என்று சொல்லுகிறார்கள். நயா பைசாவாலேயே பெரிய குழப்பம்தான் ஏற்பட்டிருக்கிறது. அந்தக் குழப்பத்தினால் சாதாரண ஜனங்கள் ரொம்பவும் கஷ்டப்படுகிறார்கள் என்பது வாஸ்தவம் தான். நயா பைசாவால் ஏற்பட்டிருக்கக்கூடிய குழப்பத்தை பயன்படுத்திக் கொண்டு வியாபாரிகள் அதிகப்படியாக சம்பாதிக்கிறார்கள். ட்ரான்சிஷனல் ஸ்டேஜில் இப்படித்தான் இருக்கும். இதனால் ஏற்படக்கூடிய கஷ்டத்தை தவிர்க்க முடியாது. கூடுமான வரையில் நிலைமையை நாம் சமாளித்துக் கொள்ள வேண்டும். எவ்வளவு சீக்கிரத்தில் அதற்கு நிவாரணத்தை தேடிக்கொள்ள வேண்டுமோ அவ்வளவு சீக்கிரத்தில் தேடிக்கொள்ள முயற்சி எடுத்துக்கொள்ள வேண்டும். குழப்பத்தை ஒரு அளவுக்குத்தான் குறைக்கலாம்.

வக்கீல்களைப்பற்றி சொன்னார்கள். அவர்களுக்கு வேலை இல்லை என்று சொன்னார்கள். அவர்களுக்குள்ள வேலை போகவில்லை. அவர்களிடத்தில் ஏற்பட்ட குழப்பத்தை எவ்வளவு தூரம் குறைக்கலாமோ அவ்வளவு தூரம் குறைக்க ஏற்பாடு செய்து கொள்ளலாம். அதற்கு எவ்வளவோ காரியங் களைச் செய்து கொள்ளலாம். அவைகளைச் செய்து கொண்டால் குழப்பம் ஓரளவிற்கு குறையும். ஏதாவது சின்னச் சின்ன திருத்தங்களை செய்திருக் கலாம், சிலவற்றை செய்யாமல் விட்டு விட்டிருக்கலாம். அதனால் குடி முழுகி விடாது. அடிப்படை பிரச்னையில் எந்த விதமான வித்தியாசமும் இல்லை. சின்னச் சின்ன விஷயங்களில் வித்தியாசம் இருந்தால் அதனால் பரவாயில்லை. கூடுமான வரைக்கும் நல்ல திருத்தங்களைக் கொடுத்திருக் கிறோம். அவைகளையெல்லாம் கனம் அங்கத்தினர்கள் ஒப்புக்கொண்டு இந்த பிரேரேபணையை நிறைவேற்றும்படியாகக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

MR. SPEAKER : The question is—

"That the Indian Stamp (Madras Amendment) Bill, 1958, (L.A. Bill No. 12 of 1953) as amended, be passed."

**The motion was put and carried and the Bill as amended was passed.**

## (2) THE MADRAS CHILDREN (AMENDMENT) BILL, 1958[a] (L.A. BILL NO. 10 OF 1958).

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Sir, I move—

"That the concurrence of the Legislative Council be obtained for setting up a Joint Select Committee of both the Houses consisting of 24 Members (16 Members of the Assembly and 8 Members of the Council) to consider the Madras Children (Amend-

[a] Published in the *Fort St. George Gazette*, Extraordinary, dated 13th March 1958.